13th September 1958]

(*b*) the number of draft notifications and draft declarations withdrawn after publication in the *Fort St. George Gazette* in 1958 so far; and

(*c*) the reasons therefor?

THE HON. SRI P. KAKKAN (*a*) Six, Sir.

(*b*) Nil.

(*c*) Does not arise.

SRI M. JAGANNATHAN : தலைவர் அவர்களே, தென்னாற்காடு ஜில்லா க்ஷேமநல அதிகாரியால் ஹரிஜனங்களுக்கு வீட்டு மனைகள் ஆர்ஜிதம் செய்து வழங்கப்படும் விஷயத்தில் அதிகமான காலதாமதம் ஏற்பட்டுக்கொண்டு வருகிறது. அதை நிவர்த்தி செய்ய அரசாங்கம் துரிதமான நடவடிக்கை எடுத்துக் கொள்வார்களா ?

THE HON. SRI P. KAKKAN : நிலங்களை ஆர்ஜிதம் செய்வதில் அரசாங்கம் எல்லா நடவடிக்கைகளையும் எடுத்துக் கொண்டு வருகிறது என்கிற விஷயம் கனம் அங்கத்தினருக்குத் தெரியும். குறிப்பிட்ட நிகழ்ச்சி பற்றி காலதாமதமாகிறது என்பதாகச் சொன்னால் அதைப்பற்றி கவனிக்கிறேன்.

### *Bus Service*

* 209 *Q*—SRI N. R. THIAGARAJAN : கனம் மின்சார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

மதுரை ஜில்லாவிலுள்ள காந்திகிராமத்திலிருந்து சின்னாளப்பட்டிக்கு ஒரு ஷட்டில் பஸ் ஸர்வீஸ் விட உத்தேசமுண்டா ?

THE HON. SRI V. RAMAIAH : No, Sir.

SRI N. R. THIAGARAJAN : சார், திண்டுக்கல்லில் இருந்து காந்தி கிராமம் வழியாக சின்னாளப்பட்டிக்கு ஷெட்டில் ஸர்வீஸ் விடுவதற்கு வசதி செய்யக்கூடாதா ? சின்னாளப்பட்டியும், காந்திகிராமமும் மிகப் பெரிதாகிக் கொண்டிருக்கிறதே ?

THE HON. SRI V. RAMAIAH : கேள்வி காந்திகிராமத்திற்கும், சின்னாளப்பட்டிக்கும் ஷெட்டில் சர்விஸ் விடுவதுபற்றி. இரண்டுக்கும் இடையில் 1.1 மைல்தான் இருக்கிறது. இதற்கு ஷெட்டில் சர்விஸ் போடவேண்டும் என்று சொல்வதன் மூலம் நம் நாட்டுப் பழக்கத்திற்கு ஊறு விளைவிக்க அங்கத்தினர் தூண்டுவதாகத் தெரிகிறது.

SBI N. R. THIAGARAJAN : நான் திண்டுக்கல்லுக்கும் சின்னாளப்பட்டிக்கும் காந்திகிராமம் வழியாக என்று கேள்வி கொடுத்திருந்தேன். தப்பாக அச்சேறியிருக்கிறது.

THE HON. SRI V. RAMAIAH : தப்பாக அச்சிடப்படவில்லை. அதில் பிழை ஒன்றும் கிடையாது. கனம் அங்கத்தினர் வேண்டுமானால் பிழையாகவே எழுதிக் கொடுத்திருக்கலாம்.

### *Municipal Commissioners*

* 210 *Q.*—SRI M. JAGANNATHAN : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(*a*) the number of Harijan candidates who applied for selection as Municipal Commissioners in 1957–58; and

(*b*) the number selected?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (a) There was no selection of Municipal Commissioners in 1957–58.

(b) Does not arise.

SRI M. JAGANNATHAN : In view of the fact that there is very poor representation of Harijans in the service of Municipal Commissioners in our State, will the Government consider the desirability of appointing more number of Harijans in this service?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : At the time of the selection of Commissioners, we can consider that point. But, at present, there is no selection.

### *Valparai shooting*

* 211 Q.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state whether any action has been taken against the Police Sub-Inspector, who was responsible for shooting the plantation workers, Valparai, in January 1957?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The entire matter is under examination.

SRI N. K. PALANISWAMI : ஸார், கனம் அமைச்சர் அவர்கள் அன்றைய தினம் சட்டசபையில் சொல்லும்போது இதைப்பற்றி விசாரணை செய்யும்படி ஐ.ஜி.-க்குச் சொல்லியிருக்கிறோம் என்று சொல்லி ஒரு வருஷத்திற்கு மேலாகியும் இதுவரையிலும் ஒரு நடவடிக்கையும் எடுக்காமல் இருப்பதன் காரணம் என்ன ? இம்மாதிரிப்பட்ட சப்-இன்ஸ்பெக்டர்களை வைத்திருக்கவேண்டும் என்று இந்தச் சர்க்கார் நினைக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : சப்-இன்ஸ்பெக்டர் தகுந்த காரணத்தோடுதான் சுட்டார் என்று விசாரணை செய்து கமிஷன் தெரிவித்திருக்கிறது. ஆனால் ஸப்-இன்ஸ்பெக்டர் அரஸ்டு செய்ததைப்பற்றிதான் இப்போது பிரச்னை. அதைப்பற்றி விசாரணை செய்து இன்னும் முடிவு வரவில்லை. இதற்கு முன்பாக அப்பீல் இருந்தது. அப்பீல் முடிந்த பிறகு அதன் மீது ஐ.ஜி.யினுடைய ரிமார்க் அரசாங்கத்திற்கு வந்துவிட்டது. அது இப்போது சர்க்காரின் பரிசீலனையில் இருக்கிறது.

SRI M. KALYANASUNDARAM : அப்பீலில் குற்றம் சாட்டப்பட்ட தொழிலாளர்கள் தொழிற்சங்க பிரதிநிதிகள் இவர்கள் எல்லாம் விடுதலை அடைந்துள்ளனர். அதோடு போலீஸார் சாதுரியமாக நடந்திருந்தால் இதைத் தவிர்த்திருக்கலாம் என்று அப்பீல் முடிவில் குறிப்பிட்டிருப்பது அரசாங்கத்துக்குத் தெரியுமா ? இதில் இறந்துபோனவர்களுடைய குடும்பத்திற்கு நஷ்ட ஈடு கொடுப்பதற்குச் சர்க்கார் நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஹைகோர்டு தீர்ப்புக்கும் இறந்தவர்களுக்கும் நஷ்ட ஈடு கொடுப்பதற்கும் சம்பந்தமில்லை என்று நினைக்கிறேன். இறந்தவர்களுடைய குடும்பத்திற்கு நஷ்ட ஈடு கொடுக்க வேண்டும் என்பதைப்பற்றி அரசாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டு வந்தால் அதைப்பற்றி வேண்டிய நடவடிக்கை எடுத்து அதைப்பற்றி விவரங்களையும் சொல்ல முடியும்.